POST WITHOUT PREPAYMENT LICENCE NO. 36-TN-MS C. P. P. 55 — ANNA Leading Progressive Tamil Daily of the People

# இலங்கை பிரச்சினைக்கு தீர்வு: புரட்சி தலைவர் வற்புறுத்தல்

Regd. No. TN-MS (C) 244 Phone 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 31-12-1985 செவ்வாய் வெளியீடு 1-1-1986 புதன [இதழ 73

## பிரதமரின் திட்டவட்ட அறிவிப்புக்கு பாராட்டு

### தமிழக மக்களுக்கு புத்தாண்டு வாழ்த்து

### பிளவுசக்திகளுக்கு செய்யாறு புகட்டியபாடம்

**சென்னை, டிச. 31- இலங்கைத் தமிழர்களின் இன்னல்களைத் தீர்த்திட தகுந்த நடவடிக்கைகளை பிரதமர் ராஜீவ்காந்தி உடனடியாக மேற்கொள்ள வேண்டுமென முதல்வா புரட்சித்தலைவர் தனது புத்தாண்டு வாழ்த்துச்செய்தியில் கேட்டுக்கொண்டுள்ளார்.**

புத்தாண்டு தினத்தை யொட்டி முதல்வர் புரட்சித் தலைவர் வெளியிட்டுள்ள வாழ்த்துச் செய்தி வருமாறு!

நான் வணங்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே, என்னை வழிநடத்திச் செல்லும் பெரியோர்களே என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே பல்வேறு துறைகளில் சாதனைகளையும் ஒருசில சோதனைகளையும் ஏற்படுத்திய 1985ம் ஆண்டு நம்மிடமிருந்து விடை பெற்றுக்கொள்கிறது புதிய நம்பிக்கைகளுக்கும் முன்னேற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் வழிகாட்டும் ஆண்டாக 1986ம் ஆண்டு அமைந்திடும் என்ற எதிர்பார்ப்புடன் புதிய ஆண்டை எதிர்கொண்டு அழைக்கும் நிலையில் உள்ளோம்

மக்களுடைய அன்றாட பிரச்சினைகளுக்கும் நீண்டகாலபிரச்சினைகளுக்கும் உடனடியான தீர்வுகளைக் காணவேண்டிய கட்டாயம் நமக்கு இருக்கிறது.

இம்முயற்சியில் ஈடுபட்டுள்ள அனைவரும் தங்கள் தங்கள் பணிகளில் உற்சாகத்தோடும், ஊக்கத்தோடும் கடமையுணர்வோடும் பாடுபடவேண்டும் என்பதே எனது அன்பான வேண்டுகோள் ஆகும்.

நமது நாட்டை வாட்டி வந்த பல்வறு சிக்கல்களுக்கு நாம் கடந்த ஆண்டில் தீர்வைக் கண்டோம் என்றாலும் தமிழகத்தைப் பொறுத்தவரை இருபெரும் சோதனைகள் நேர்ந்துள்ளது

இயற்கையின் சீற்றத்தால் கடலோர மாவட்டங்களில் பெரும்மழையும்வெள்ளமும் ஏற்படுத்திய பாதிப்புகளிலிருந்து இயல்பான வாழ்வுக்கு மக்களை திருப்பிவிட பெருமுயற்சி செய்து வருகிறாம்.

மறுபுறம் போதிய பாசன நீர் இன்மையால் காவிரி பாசன பகுதிகளில் வேளாண்மைக்கு ஏற்பட்டுள்ள பாதிப்பு ஒரு பெரிய அறைகூவலாக எழுந்துள்ளது இவ்வகையில் கர்நாடக அரசிடமிருந்து ஓரளவு நீர் பெற நாம் எடுத்த முயற்சி வெற்றி பெற்றிருக்கிறது என்றாலும் கிடைக்கின்ற நீரை மிகவும் சிக்கனத்துடன் பயன்படுத்த வேண்டிய சூழ்நிலையை அனைவரும் உணருவார்கள் என்று நம்புகிறேன்

இந்த சோதனையான கட்டத்தை மக்களின் முழு ஒத்துழைப்புடன் நாம் சமாளிக்க முடியும் என்று நான் நம்புகிறேன்

#### நெஞ்சங்களில் கொதிப்பு

தமிழகமக்களுடையநெஞ்சங்களில் கொதிப்பையும், வேதனையையும் ஏற்படுத்துகிற வகையில் இலங்கை தமிழர்கள் மீது இலங்கை ராணுவத்தின் தாக்குதல்கள் அதிகரித்து வருகின்றன

இந்திய பிரதமர் ராஜீவ் காந்தி அவர்கள் கடந்த ஓராண்டு காலத்தில் மேற்கொண்ட முயற்சிகள் அனைத்தையும் வீணாக்கும் வகையில் இலங்கை அரசும், ராணுவமும் அப்பாவி தமிழர்களை கொன்று குவித்து வருகின்றன

அரசியல் ரீதியிலும் ராஜதந்திர நடவடிக்கைகள் வாயிலாகவும் இலங்கை அரசை ஒரு கவுரமான வழிக்கு திருப்ப நாம் எடுத்த முயற்சிகள் போதிய பலன் அளிக்கவில்லை என்பது வருந்தத்தக்கதாகும்

இலங்கையிலிருந்து நம் நாட்டுக்கு வந்துள்ள அகதிகள் மரியாதையுடன் நாடு திரும்பும் நிலை ஏற்படும் வரை இலங்கையிலுள்ள குடியுரிமையற்ற இந்திய தமிழர்களான தோட்டத் தொழிலாளர்களை நாங்கள் ஏற்க முடியாது என்று பிரதமர் ராஜீவ்காந்தி திட்டவட்டமாக தெரிவித்திருப்பதுபோற்றிபாராட்டத்தக்கதாகும்

இலங்கைத்தமிழர் பிரச்சினை என்பது இந்தியா முழுவதும கவலைகொள்ளத்தக்க பிரச்சினை என்று நாடாளுமன்றத்தில்மத்திய அரசு அறிவித்திருப்பதும் பெரிதும் வரவேற்கத்தக்கதாகும்.

இதே நிலையும் உறுதியும் தொடர்ந்து கடைபபிடிக்க வேண்டும் என்று நாம் விரும்புவதுடன் இந்திய பிரதம ராஜீவ்காந்தி அவர்கள இலங்கை தமிழர்களுடைய இன்னல்களை தீர்த்திட தகுந்த நடவடிக்கைகளை உரியமுறையில் உடனடியாக மேற்கொள்ள வேண்டுமென்று தமிழக மக்கள் அனைவருடைய சார்பிலும் கேட்டுக்கொள்கிறேன்,

மக்களின் தீர்ப்பின் படி மூன்றாவது முறையாக முதல்வர் பொறுப்பேற்று தமிழகத்தில் பேரறிஞர் அண்ணாவின் அரசினை அமைக்க எனக்கு வாய்ப்பளித்த தமிழக மக்கள் இந்த அரசின் மீது தங்கள் நம்பிக்கையை உறுதிப்படுத்தும் வகையில் செய்யாறு தொகுதி இடைத் தேர்தல் முடிவு அமைந்ததை சுட்டிக்காட்ட விரும்புகிறேன்

#### பிளவு சக்திகள்

மக்களுக்கும், அரசுக்குமிடையே பிளவுஏற்படுத்தி குழப்பம் விளைவிக்க நினைத்த சக்திகள் இனியாவது பாடம் பெறும் என்று எதிர்பார்க்கிறேன்.

அதே நேரத்தில் மக்கள் வைத்துள்ள நம்பிக்கைக்கு உரிய வகையில் பணிபுரிய வேண்டிய பெரும்பொறுப்பு நமக்கெல்லாம் கூடி இருக்கிறது என்பதையும் நாம் நன்கு உணர்ந்திட வேண்டும்

வளர்ச்சி, முன்னேற்றம் இவையெல்லாம் அரசாங்க உத்தரவுகள் வாயிலாக மட்டும் ஏற்பட்டு விடக்கூடியதல்ல நாம் அனைவரும் நம்மிடம்ஒப்படைக்கப்பட்டுள்ள பொறுப்புக்களை முழுகின்றிவேகமாக செயல்படுத்துவதன் வாயிலாகத் தான் முன்னேற முடியும் உழைப்பு கடமையுணர்வுடன் கூடிய உழைப்பஎனும் மூலமந்திரம் தான்உயர்வுக்குஆதாரமானதாகும்.

நாம் அனைவரும் ஒரு அணியில் ஒரே நோக்கோடு மக்களுக்கான ஆக்கப்பணியில் ஒன்று சேர்ந்துழைக்கும்வாய்ப்பை புத்தாண்டு நமக்கு வழங்கும் என்ற நம்பிக்கையோடு அனைவருக்கும் என் இதயங்கனிந்த புத்தாண்டு வாழ்த்துக்களை உரிமையாக்குகிறேன்

அண்ணா நாமம் வாழ்க

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் தனது வாழ்த்துச் செய்தியில் கூறியுள்ளார்.



சென்னை வந்துள்ள நீதிபதி சர்க்காரியாவுக்கு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் விருந்தளித்தார் அப்போது நினைவுச் சின்னம் ஒன்றையும் புரட்சித்தலைவா வழங்கினார்.

### குரானா புத்தாண்டு வாழ்த்து

சென்னை, டிச 31.— தமிழக ஆளுநர் குரானா தனது புத்தாண்டு செய்தியில் தமிழக மக்களுக்கு புத்தாண்டு வாழ்த்து தெரிவித்துள்ளார்,

மக்கள் மகிழ்ச்சியாகவும், வளமாகவும் வாழதனது நல்லெண்ணங்களையும் தெரிவித்துள்ளார

குறிப்பாக சமீபத்தில் ஏற்பட்ட வெள்ள பாதிப்பிலிருந்து மக்கள் விரைவாக சகஜ நிலைக்கு திரும்ப 1986ம் ஆண்டு வழி வகுக்கும் என்று தான் நம்புவதாகவும் ஆளுநர் குரானா தெரிவித்துள்ளார்.

### கர்நாடக வறட்சி: புரட்சித்தலைவர் ரூ15லட்சம்உதவி

சென்னை, டிச. 31— நமது அண்டை மாநில மான கர்நாடகம் தொடர்ந்து நான்காவது ஆண்டாக வறட்சியால் பாதிக்கப்பட்டு நடப்பு ஆண்டில் வறட்சியின் கடுமை கூடுதலாகி அம்மாநில மக்கள் பெரும் இன்னலுக்கு ஆளாகியுள்ள நிலவரம் குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் ஆழ்ந்த வேதனையும், கவலையும் கொண்டுள்ளார்

வறட்சியால் பாதிக்கப்பட்ட கர்நாடக மாநில மக்கள்பால் தமிழக அரசும் மக்களும் கொண்டுள்ள பரிவுணாவை வெளிப்படுத்தும் அடையாளமாக கர்நாடக மாநிலவறட்சிதுயர்தணிப்பு பணிகளுக்கு 15 லட்ச ரூபாய் முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து வழங்கிட முதல்வர் புரட்சி தலைவர் ஆணை பிறப்பித்துள்ளார்

### மத்திய- மாநில அரசு உறவுகள்:

## முதல்வர் புரட்சிதலைவர் சர்க்காரியாவிடம் அறிக்கை அளித்தார்

சென்னை, டிச 31- மத்திய மாநில அரசு உறவுகள் குறித்து தமிழக அரசின் நிலையை விளக்கி, முதல்வர் புரட்சித் தலைவர் சர்க்காரியா கமிஷனிடம் அறிக்கை அளித்தார்.

மத்திய மாநில அரசு உறவுகள் குறித்து தமிழக அரசின் நிலையை விளக்கும் அறிக்கையினை சர்க்காரியா கமிஷனிடம் முதல்வர் புரட்சித்தலைவர் இன்று தாக்கல் செய்தார்

மத்திய மாநில அரசுகள் உறவு குறித்து ஆராய்ந்து வரும சர்க்காரியாகமிஷன் கடந்த 26-ந் தேதி முதல சென்னையில் விசாரணை நடத்தி வருகிறது.

தமிழக அரசின் சார்பில் மத்திய மாநில அரசுகள் உறவு குறித்து அறிக்கை தயாரிக்க ஏற்கனவே நீதிபதி ராமபிரசாத்ராவ் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டிருந்தது. அதன் அறிக்கை பெறப்பட்டு அது பற்றி மேலும் ஆராய நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில் அமைச்சரவை உட்குழு அமைக்கப்பட்டு விரிவான அறிக்கை தயாரிக்கப்பட்டது

பிறகு முதல்வர் புரட்சித் தலைவர் அந்த அறிக்கைக்கு ஒப்புதல் அளித்துள்ளார்

சர்க்காரியா கமிஷனிடம் அறிக்கையை தாக்கல் செய்ய முதல்வர் புரட்சித் தலைவர் சரியாக காலை 10 மணிக்கு கோட்டையிலுள்ள 10-வது மாடிக்கு வந்தார்

நீதிபதி சர்க்காரியாவும் அந்தக் குழுவிலுள்ள சிவராமன், சென் ஆகியோர் 9.55க்கே வந்துவிட்டனர்

முதல்வர் புரட்சித் தலைவருடன் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் மற்றும் அமைச்சர் பெருமக்கள் வந்திருந்தனர்

தலைமைச் செயலாளர் டி.வி. அந்தோணி மற்றும் துணைச் செயலாளர்களும உடனிருந்தனர்

10 மணிக்கு தமிழக அரசின் நிலையை விளக்கும் அறிக்கையைமுதல்வர் புரட்சித்தலைவர் சர்க்காரியாவிடம் அளித்தார். அந்த அறிக்கையிலுள்ள முக்கிய சிறப்பு அம்சங்களை சட்ட அமைச்சர் பொன்னையன் விளக்கினார்

## தலைமைக்கழக அறிவிப்பு

### தமிழ்நாடு மேலவை பட்டதாரி தொகுதி தேர்தல்

விரைவில் நடைபெற உள்ள தமிழ்நாடு சட்டமன்ற மேலவைக்கு கோவை- சேலம்- நீலகிரி- தர்மபுரி- பெரியார் மாவட்டங்கள் அடங்கிய தமிழ்நாடு மேற்கு மத்திய பட்டதாரி தொகுதிக்கு,

**டாக்டர் இரா. சனார்த்தனம்,**
எம் ஏ, பி எச் டி, எம் எஸ் சி
அவர்களும்

தஞ்சை- திருச்சி- புதுக்கோட்டை மாவட்டங்கள் அடங்கிய தமிழ்நாடு கிழக்கு மத்திய பட்டதாரி தொகுதிக்கு

**இரா. சாமிநாதன் பி எஸ்ஸி பி எல்**
(மேற்கு தஞ்சை மாவட்ட செயலாளர்)
அவர்களும்

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் அதிகார பூர்வமான வேட்பாளர்களாக போட்டியிடுவார்கள்

இதய தெய்வம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது

**எஸ். இராகவானந்தம**
பொதுச்செயலாளர்

சென்னை— 4
31—12—85.

## தலைமைக் கழக அறிவிப்பு

### ஊராட்சி,ஒன்றிய பெருந்தலைவர்- நகர் மன்றத்தலைவர் தேர்தல்

அண்மையில் நடைபெற இருக்கின்ற ஊராட்சி ஒன்றிய பெருந்தலைவர் தேர்தலுக்கும் நகராட்சித் தலைவர் தேர்தலுக்கும அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் போட்டியிட விரும்பி மனு செய்துள்ளவர்கள மட்டும கீழ்க்குறிப்பிட்ட தேதிகளில் தலைமைக்கழகத்துக்கு வரும்படி கேட்டுக் கொள்ளப் டுகிறார்கள்.

விண்ணப்ப மனு கொடுத்துளளவர்களைத் தவிர பரிந்துரை செய்ய வேறு யாரையும் உடன் அழைத்து வரக்கூடாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

| | | | |
|---|---|---|---|
| 2-1-86 | பிற்பகல் | 3.00 மணிக்கு | |
| 3-1-86 | காலை | 9.00 மணிக்கு | சேலம் மாவட்டம் |
| 4-1-86 | பிற்பகல் | 4.00 மணிக்கு | |
| 5-1-86 | காலை | 9.00 மணிக்கு | திருச்சி மாவட்டம் |
| 6-1-86 | காலை | 9.00 மணிக்கு | கோவை மாவட்டம் |
| 7-1-86 | காலை | 9.00 மணிக்கு | பெரியார் மாவட்டம், நீலகிரி மாவட்டம் |
| 8-1-86 | பிற்பகல் | 4.00 மணிக்கு | மதுரை மாவட்டம், அண்ணா மாவட்டம் |

**எஸ். இராகவானந்தம்**
பொதுச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை—14
31-12-85





**உதவி**

இக்கட்டான நேரத்தில் எதிர் பாராமல் செய்யப்படும் உதவியே மனதில் என்றும் நிலைத்து நிற்கும்.

—பேரறிஞர் அண்ணா

**'மரியாதை**

மரியாதை என்பது கேட்டுப் பெறுவதல்ல. நம்மைப் பார்க்கும் போதே மனதில் எழுவது தான் மரியாதை.

—தந்தை பெரியார்

## எல்லை காந்தி புதுடெல்லி திரும்பினார்

புதுடெல்லி, டிச. 31—பம்பாயில் நடைபெற்ற காங்கிரஸ் நூற்றாண்டு விழாவில் கலந்து கொண்ட எல்லை காந்தி கான் அப்துல் கபார் கான் நேற்று பம்பாயில் இருந்து விமானப் படை விசேஷ விமானத்தில் புதுடெல்லி வந்து சேர்ந்தார்.

அதே விமானத்தில் பிரதமர் ராஜீவ்காந்தியும் பயணம் செய்தார். ஆனால் ஜெய்ப்பூரில் பிரதமர் ராஜீவ் எல்லை காந்தியிடம் விடை பெற்றுக் கொண்டு இறங்கி விட்டார்.

எல்லை காந்தி புதுடெல்லியில் சில நாட்கள் தங்கியிருப்பார்.

# புரட்சித்தலைவர் கோரிக்கையை ஏற்று தமிழகத்துக்கு கூடுதல் அரிசி

### மாதத்திறகு 90 ஆயிரம டன்: மத்திய அரசு ஒதுக்கீடு

சென்னை டிச. 31—தமிழக முதல்வர் புரட்சித் தலைவரின் கோரிக்கையை ஏற்று மத்திய அரசு தமிழகத்துக்கு அதிக அரிசி ஒதுக்கியது என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

உணவு அமைச்சர் திருநாவுக்கரசு நிருபர்களிடம் கூறியதாவது:—

தமிழ்நாட்டுக்கு மத்திய அரசு மாதம் தோறும் 40 ஆயிரம் டன் அரசி ஒதுக்கி வருகிறது.

ரேஷன் கடைகள் அதிகம் இருப்பதாலும், இலவச சத்துணவு போடுவதாலும் மாதம் ஒருலட்சம் டன் அரிசி ஒதுக்க வேண்டும் என்று மத்திய அரசை முதல்வர் புரட்சித் தலைவர் கேட்டுக் கொண்டார்.

இதைத் தொடர்ந்து தமிழ்நாட்டுக்கு நவம்பர், டிசம்பர் மாதங்களின் விசேஷ ஒதுக்கீடாக ஒவ்வொரு மாதத்துக்கும் ஐம்பது ஆயிரம் டன் அரிசியை கூடுதலாக மத்திய அரசு ஒதுக்கியுள்ளது.

பிற மாநிலங்களில் அரிசி வாங்கிக் கொள்ள தமிழகத்துக்கு மத்திய அரசு அனுமதி வழங்கியுள்ளது. இதற்காக டெண்டர் கோரப்பட்டு அது பற்றி பரிசீலனை நடக்கிறது.

தமிழக அரசு 5.5 லட்சம் டன் நெல் கொள்முதல் செய்துள்ளது. சம்பா சீசனில் 10 முதல் 12 லட்சம் டன் நெல் கொள்முதல் செய்ய திட்டமிட்டுள்ளது.

எனவே 1986-ல் எந்த வித உணவு பிரச்சினையும் வராது.

தஞ்சை மாவட்டத்திலும் தென் ஆற்காடு திருச்சி, புதுக்கோட்டை ஆகிய மாவட்டங்களில் சில பகுதிகளிலும் உள்ள ஏற்பாக கொள்முதல் முறை தேவைப்பட்டால் ஜனவரி 31-ந் தேதிக்கு மேலும் நீட்டிக்கப்படலாம்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

## விமானப்படை ஹெலிகாப்டர் விழுந்து நொறுங்கியது: 4 பேர் சாவு

புதுடெல்லி, டிச 31—இந்திய விமானப்படையை சேர்ந்த ஹெலிகாப்டர் விமானம் ஒன்று கீழே விழுந்து நொறுங்கியதால் ஏற்பட்ட விபத்தில் 4 பேர் உயிரிழந்தனர்.

கிழக்குப் பிராந்தியப் பகுதியில் இந்த ஹெலிகாப்டர் விமானம் பறந்து கொண்டிருந்தபோது இந்த விபத்து நடந்தது. உயிரிழந்த 4 பேர்களும் விமானப் படையைச் சேர்ந்த முக்கிய அதிகாரிகள் ஆவர். இந்த விபத்து குறித்து விசாரணை செய்ய உத்தரவிடப்பட்டுள்ளது.

## பொறியியல் வடிவமைப்பு: தமிழக மாணவர்கட்கு முதல்பரிசு

திருச்சி, டிச. 31—

பிரபல நிர்மாணப் பொறியாளர் டாக்டர் எம். விஸ்வேஸ்வரய்யாவின் பிறந்த நாள் விழாவையொட்டி திருச்சியில் பொறியாளர்களுக்கான வடிவமைப்புப் போட்டி நடைபெற்றது. பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த பொறியியல் கல்லூரி மாணவர்கள் இதில் கலந்து கொண்டனர்.

தமிழ்நாட்டைச் சேர்ந்த மின்சாரப் பொறியாளர் பிலிப் ஆபிரகாம், கட்டிடப் பொறியாளர் தினேஷ் குமார் ஆகியோர் இந்தப் போட்டியில் முதல் பரிசு பெற்றனர்.

கல்லூரியின் மின்சாரத் துறை தலைமைப் பேராசிரியர் டாக்டர் எம். ஆர். கிருஷ்ண மூர்த்தி ஒரு பத்திரிகைக்குறிப்பில் இத்தகவல்களைத் தெரிவித்துள்ளார்.

# டென்னிஸ் போட்டி: தமிழக பெண்களுக்கு தங்கப்பதக்கம்

கோவை, டிச. 31—பெண்கள் தேசிய விளையாட்டுப் போட்டியில் தமிழக அணிக்கு தங்கப் பதக்கம் கிடைத்தது.

கோவையில் நடந்துவரும் பெண்கள் தேசிய விளையாட்டுப் போட்டியில் தமிழக அணி வெற்றி பெற்று தங்கப்பதக்கத்தை பெற்றது.

இப் போட்டியில் தமிழகத்தின் சார்பில் திருப்தி ஜோஷி, சூசன் ஆபிரகாம் லட்சுமி ஜெயராம், சிசிலா ஆகியோர் பங்கேற்றனர்.

கைப்பந்துப் போட்டியில் தமிழகமும், மேற்குவங்கமும் மோதின. சூப்பர்லீக் போட்டியான இதில் தமிழக அணி வெற்றி பெற்றது.

கோ-கோ போட்டியில் மத்திய பிரதேச அணி தமிழக அணியைத் தோற்கடித்தது.

கபடி போட்டியிலும் தமிழக அணி பஞ்சாப் அணியிடம் தோற்றது.

### ஆக்கிப் போட்டி

ஹாக்கிப் போட்டியில் தமிழ்நாடு அணியும் கேரளா அணியும் மோதின. இந்தப் போட்டி டிராவில் முடிந்தது.

### பூப்பந்து

பூப்பந்து போட்டியில் "சூப்பர்லீக்" பந்தயத்தில் தமிழ்நாடு மேற்கு வங்கத்தைத் தோற்கடித்தது.

### மின்னல் வேகம்

400 மீட்டர் தொடர் ஓட்டப் பந்தயத்தில் தமிழக வீராங்கனைகள் தங்கப் பதக்கத்தைத் தட்டிச் சென்றனர்.

தமிழக அணியில் இடம் பெற்றிருந்த காப்னா புனிதா ஜெயசந்திரன் லட்சுமி லதா, மாலி ஆகிய வீராங்கனைகள் தங்கப் பதக்கத்தைப் பெற்றனர்.

"அத்லெடிக்" போட்டியில் தமிழகத்திற்கு இது நாலாவது தங்கப்பதக்கம் ஆகும்.

ஜூடோ போட்டிகளில் அரியானாவிற்கு 5 தங்கப் பதக்கங்கள் கிடைத்தன.

தொடர்ந்து போட்டிகள் நடைபெற்று வருகின்றன.

## மக்கள் குறை தீர்ப்பதில் அமைச்சர் அருணாசலம் தீவிரம்

திருச்சி, டிச. 31—அமைச்சர் அருணாசலம் திருச்சி மாவட்டம், பெரம்பலூர் வட்டம் ஆலத்தூர் ஒன்றிய பொது மக்களின் குறைகளை கேட்டறிந்தார். 2000க்கும் மேலான மனுக்களை அமைச்சர் அருணாசலம் பெற்றுக்கொண்டார். அம்மனுக்கள் மீது என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று குறிப்புகள் எழுதி, அதிகாரிகள் அவற்றின் மீது தக்க நடவடிக்கை எடுத்து, மனு கொடுத்தவர்களுக்கு நடவடிக்கை எடுத்ததின் முடிவினைத் தெரிவிக்க வேண்டும் என்று அமைச்சர் அருணாசலம் அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்.

குறைகளை கேட்டறிந்த பின்னர் அதிக மதிப்பெண்கள் பெற்ற ஆதிதிராவிட மாணவ மாணவியர்களுக்கு பரிசு பொருள்களை அமைச்சர் அருணாசலம் வழங்கினார்.

# பல்கலைக் கழக துணைவேந்தர் வீட்டுக்கு தீ: மாணவர் ரகளை

டாக்கா, டிச. 31—மாணவர்களுக்கும் போலீசாருக்கும் இடையே ஏற்பட்ட மோதலில் டாக்கா பல்கலைக்கழக துணைவேந்தர் வீட்டுக்கு மாணவர்கள் தீவைத்துக் கொளுத்தினர். போலீசார் மீதும் கற்களை வீசி மாணவர்கள் ரகளை செய்தனர்.

வங்கதேசத் தலைநகர் டாக்காவில் நேற்று பல்கலைக் கழக மாணவர்கள் ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டனர். வங்கதேச தேசியக் கட்சிக்கு டாக்கா பல்கலைக்கழக மாணவர்கள் பெரும்பான்மையினர் ஆதரவு அளித்து வருகிறார்கள்.

ஆதரவாளர்கள் அதிகம் வசித்து வரும் மோஷின் மண்டபத்தில் நேற்று டாக்கா போலீசார் திடீர் சோதனை நடத்தி 2 மாணவர்கள் உள்பட 13 பேர்களை கைது செய்தனர். கைது செய்யப்பட்டவர்களை வேனில் ஏற்ற முற்பட்ட போது மாணவர்கள் பெரும் கலவரத்தில் ஈடுபட்டனர்.

போலீசார் மீதும் பல்கலைக் கழக அலுவலகம் மீதும் அவர்கள் கற்களை வீசி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

பின்னர் பல்கலைக்கழக துணைவேந்தர் வீட்டுக்கு தீ வைத்தனர். முன்னதாக துணைவேந்தரின் வீட்டுக்குள் புகுந்து சாமான்களை எடுத்து வெளியே எறிந்தனர்.

தேசிய கட்சியின் தலைவரான கலேதாஜியா மற்றும் பல்கலைக்கழக வளாகத்தில் பயங்கர சம்பவங்களில் ஈடுபட்டு வந்த நிரு, பாபுல் ஆகியோர் மீது போலீசார் நடவடிக்கை மேற்கொண்டதே இந்த ரகளைக்கு காரணம் என்று கூறப்படுகிறது.

கலவரம் நடந்தபோது துணைவேந்தர் தனது குடும்பத்துடன் வெளியூர் சென்றிருந்தார். மாணவர்கள் போலீசாரின் கட்டுப்பாட்டு அறைக்குள் புகுந்து ரகளை செய்தனர். மரச்சாமான்களை எடுத்து வெளியே போட்டு கொளுத்தினார்கள்.

கைது செய்யப்பட்டவர்களை உடனடியாக விடுதலை செய்ய வேண்டும் என்றும் அவர்கள் கோரினர்.

பல்கலைக்கழக வளாகத்தில் நேற்று முழுவதும் பதட்டநிலை நிலவியது. மேற்கொண்டு யாரும் கைது செய்யப்படவில்லை என்று போலீசார் கூறினர்.

## குடிநீர் திட்டங்களை துரிதப்படுத்த காளிமுத்து உத்தரவு

செங்கல்பட்டு, டிச. 31—குடிநீர் திட்டங்களை துரிதப்படுத்த அதிகாரிகளுக்கு அமைச்சர் காளிமுத்து உத்தரவிட்டுள்ளார்.

செங்கை மாவட்டம் அச்சரப்பாக்கம் தொகுதியில் நேற்று தண்டலம் பெரும்பாக்கம் ஆகிய கிராமங்களில் மழைவெள்ளத்தால் மணல் மூடிக்கிடந்த விவசாய நிலங்களில் மணல் மேடுகளை அகற்றும் பணியினை அமைச்சர் காளிமுத்து மணல் மேடுகளை அகற்றும் இயந்திரத்தை இயக்கி துவக்கி வைத்தார்.

அவருடன் தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் எஸ். டி. உக்கம் சந்த், செங்கை பாராளுமன்ற உறுப்பினர் ஜெகத்ரட்சகன் அச்சரப்பாக்கம் பின்னர் வரும் வழியில், மதுராந்தகம் தாலுக்காவில் பருக்கல் மற்றும் போரூர் ஆகிய கிராமங்களுக்கு நேரடியாகச் சென்று குடிநீர்ப் பிரச்சினைகளை கேட்டு குடிநீர்த் திட்டப் பணிகளை பார்வையிட்டார். குடிநீர்த்திட்டங்களை விரைவில் முடிக்க வாரிய அதிகாரிகளுக்கு அமைச்சர் காளிமுத்து உத்தரவிட்டார்.

## புதிய குடிநீர் திட்டம்

கடலூர், டிச 31—தென்னார்க்காடு மாவட்டம், செஞ்சி யூனியனில், தேவதானம்பேட்டையில் ரூபாய் ஐந்து லட்சம் செலவில் கட்டப்பட்டுள்ள குடிநீர் மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டியினை தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் எஸ். டி. உக்கம்சந்த், தலைமையில், அமைச்சர் ப. உ. ச. திறந்து வைத்தார்.

# 30 தமிழர்கள் சுட்டுக் கொலை: சிங்களராணுவம் வெறிச்செயல்

சென்னை, டிச. 31—திரிகோணமலை அருகே சிங்கள ராணுவத்தினர் 30 தமிழர்களை சுட்டுக் கொன்றனர்.

இலங்கையில் திரிகோணமலையை அடுத்த கிராமம் ஒன்றில் சிங்கள ராணுவத்தினர் திடீர் சோதனை என்ற பெயரில், 30 தமிழர்களைப் பிடித்துச் சென்று அவர்களைச் சுட்டுக் கொன்றனர்.

சிங்கள ராணுவத்தின் இந்த வெறிச் செயலை அடுத்து அப்பகுதியில் வசித்த தமிழர்கள் தங்கள் வீடு மற்றும் உடமைகளைக் கைவிட்டு விட்டு காடுகளுக்கு தப்பி ஓடிச் சென்றுள்ளனர்.

சுட்டுக் கொல்லப்பட்டவர்கள் தவிர மற்றும் பல தமிழர்களை ராணுவத்தினர் பிடித்துச் சென்றுள்ளனர்.

விடுதலைப் புலிகளின் அமைப்பைச் சேர்ந்த முக்கிய வீரர் ஒருவரும் கொல்லப்பட்டுள்ளார்.

அப்பகுதியில் பதட்ட நிலை நிலவுகிறது.

### ராஜீவை தொண்டமான் சந்திக்கிறார்

தமிழகம் வந்துள்ள இலங்கை அமைச்சர் தொண்டமான், ஜனவரி 10-ந் தேதி பிரதமர் ராஜீவைச் சந்தித்துப் பேசுகிறார்.

இந்திய வம்சா வழியினரின் குடியுரிமைச் சிக்கல்கள் பற்றி தொண்டமான் பிரதமர் ராஜீவுடன் பேசுகிறார்.

### புரட்சித்தலைவர்

இலங்கை அமைச்சர் தொண்டமான் மதுரையில் நிருபர்களிடம் பேசுகையில் ஜனவரி 5-ந் தேதி சென்னையில் தமிழக முதல்வரைச் சந்தித்துப் பேச உள்ளதாகவும் கூறினார்.

திரிகோணமலையில் தமிழர்கள் ராணுவத்தினரால் உயிரோடு கொளுத்தப்பட்டதாக விடுதலைப்புலிகள் தெரிவித்துள்ளனர்.

# ராஜஸ்தானில் பிரதமர் ராஜீவ்காந்தி ஒரு வாரம் ஓய்வு எடுக்கிறார்

ஜெய்ப்பூர், டிச 31—பிரதமர் ராஜீவ் காந்தி ராஜஸ்தான் சென்றுள்ளார், அங்கு புலிகள் சரணாலயத்தில் தனது மனைவி குழந்தைகளுடன் 6 நாட்கள் ஓய்வு எடுக்கிறார்.

பிரதமர் ராஜீவ் காந்தி சிலநாட்கள் ஓய்வு எடுக்க திட்டமிட்டிருந்தார். அதன்படி ராஜஸ்தான் மாநிலம் ஜெய்ப்பூர் அருகே உள்ள ரந்தம்பூரில் உள்ள புலிகள் சரணாலயத்தில் தங்கி ஓய்வு எடுக்க தீர்மானித்தார்.

இதற்கிடையில் பம்பாயில் காங்கிரஸ் கட்சியின் நூற்றாண்டு விழா 3 நாட்கள் நடந்தது. அந்த மாநாட்டில் பிரதமர் ராஜீவ் கலந்து கொண்டார்.

மாநாடு நேற்று முன்தினம் முடிவடைந்தது. நேற்று பம்பாயிலிருந்து ராஜீவ் காந்தி புறப்பட்டார்.

விமான நிலையத்தில் மராட்டிய மாநில கவர்னர், மராட்டிய முதல்வர் மற்றும் இந்திரா காங்கிரஸ் பிரமுகர்கள் உள்பட முக்கிய பிரமுகர்கள் பிரதமர் ராஜீவை வழியனுப்பி வைத்தனர்.

அதே விமானத்தில் ராஜீவ் குடும்பத்தாருடன் "எல்லைகாந்தி" கான் அப்துல் கபார்கான் டெல்லி புறப்பட்டார்.

ஜெய்ப்பூரில் ராஜீவ், சோனியா, ராகுல், பிரியங்கா ஆகியோர் இறங்கினர்.

பிறகு அங்கிருந்து புலிகள் சரணாலயம் உள்ள ரந்தம்பூருக்கு ஹெலிகாப்டர் மூலம் ராஜீவ் குடும்பத்துடன் புறப்பட்டு சென்றார்.

அங்கு அவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

புலிகள் சரணாலயம் 400 சதுர கிலோ மீட்டரில் அமைந்துள்ளது. அதன் மத்தியில் "ஜோகி மகால்" என்ற மாளிகை உள்ளது.

அந்த மாளிகையில் ராஜீவ் தன் குடும்பத்துடன் தங்குகிறார்.

ஜோகி மகால் மாளிகையில் மின்சார இணைப்பு கிடையாது. அந்த மாளிகை முழுவதும் பித்தளை விளக்குகள் பொருத்தப்பட்டுள்ளன.

புலிகள் சரணாலயத்தில் மின்சார விளக்குகள் அமைத்தால் இயற்கையான சூழ்நிலைக்கு மாறுபாடு தோன்றி இதனால் புலிகள் மிரளக்கூடும் என்பதற்காக அந்த மாளிகைக்கு மின்சார இணைப்பு கொடுக்கப்படவில்லை,

### விசேஷ ஏற்பாடுகள்

அந்த மாளிகையில் தான் ராஜீவ்காந்தி தங்குகிறார். ராஜீவ் அங்கு தங்குவதற்கு வேறு விசேஷ ஏற்பாடுகள் எதுவும் செய்யப்படவில்லை.

அங்கு 6 நாட்கள் அதாவது ஜனவரி 4-ந் தேதி வரை ராஜீவ் தங்குவார்.

அதன்பிறகு ஜனவரி 5-ந் தேதி அங்கிருந்து குடும்பத்துடன் புறப்பட்டு டெல்லி போய் சேருகிறார்.




Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS 600 029.

சென்னை மாநகராட்சி

# பேரறிஞர் அண்ணா பவளவிழா நினைவு வளைவு




## திறப்பு விழா



டம்: அறிஞர் அண்ணா நகர்,
3வேது நிழற்சாலை, ஈ.வெ.ரா. பெரியார் சாலை சந்திப்பு
நாள் : 1.1.1986, புதன்கிழமை நேரம்: மாலை 6 மணி

பேரறிஞர் அண்ணா பவளவிழா நினைவு வளைவை

ன்புமிகு ாடு முதலமைச்சர்
டாக்டர் **எம்.ஜி.ஆர்** அவர்கள்
று வைக்க இசைந்துள்ளார்கள்.

மாணபுமிகு தமிழ்நாடு உள்ளாட்சித்துறை அமைச்சா
திரு **ப.உ. சண்முகம்** அவர்கள்
தலைமை வகிப்பார்கள்

மாண்புமிகு தமிழ்நாடு நிதியமைச்சா
டாக்டர் நாவலர் **இரா. நெடுஞ்செழியன்** அவர்கள்

மாண்புமிகு தமிழ்நாடு அறநிலைய மற்றும் சுற்றுலாத்துறை அமைச்சர்
திரு **இராம. வீரப்பன்** அவர்கள்
மற்றும்
மாண்புமிகு தமிழ்நாடு வேளாண்மைத்துறை அமைச்சர்
டாக்டர் **கா. காளிமுத்து** அவர்கள்
சிறப்புரையாற்றுவார்கள்

இவ்விழாவில் நாடாளுமன்ற, சட்டமன்றப் பேரவை மற்றும் மேலவை உறுப்பினர்கள் கலந்து கொள்வார்கள்.

## அனைவரும் வருக!

| | |
|---|---|
| சாந்தா ஷீலாநாயர், இ.ஆ.ப., | கி. சந்திரசூடன், இ.ஆ.ப., |
| ஆணையர், சென்னை மாநகராட்சி. | சிறப்பு அதிகாரி, சென்னை மாநகராட்சி |

ELEGANT